# ஸ்ரீ வைஷ்ணவ ஸதாசார சுளகம்

## [Code of conduct for SriVaishnavites in a nut-shell]



Compiled By

'SrI deSika sevA ratnam'

U.Ve Nelvoy Naidhruva MADabhUshi

SrI SowmyanArAyaNAchAr SwAmi

ஸ்ரீ:



“नित्य सिद्धैस्समाकीर्णं तन्मयैः पाञ्चकालिकैः ।”

“नमस्ते पञ्चकालज्ञ पञ्चकाल परायण ।

पञ्चकालैकमनसां त्वमेव गतिरव्ययः ॥”

-JitantE stOtram

# ஸ்ரீவைஷ்ணவ ஸதாசார சுளகம்

[ Code of conduct for SriVaishnavites

in a nut-shell ]

தொகுப்பு

நெல்வாய் நைத்ருவ மாடபூஷி
ஸௌம்யநாராயணாசார்யர்

2011

श्रुतिस्स्मृतिः ममैवाज्ञा यस्तामुल्लङ्घ्य वर्तते ।
आज्ञाच्छेदी ममद्रोही मद्भक्तोऽपि न वैष्णवः ॥

*S*rutis smrtir mamaivAgjnA yastAmullanghya vartatE |
AgjnAcCEdee mamadrOhee madbhaktOpi na VaishNavah ||

अविप्लवाय धर्माणां पालनाय कुलस्य च ।
सङ्ग्रहाय च लोकानां मर्यादा स्थापनाय च ।।
प्रियाय मम विष्णोश्च देवदेवस्य शार्ङ्गिणः ।
मनीषी वैदिकाचारं मनसापि न लङ्घयेत् ॥

\- श्री लक्ष्मी तन्त्रम्

aviplavAya dharmANAm pAlanAya kulasya ca
sangrahAya ca lOkAnAm maryAdA sthApanAya ca
priyAya Mama VishNO*s*ca dEvadEvasya *S*ArngiNah
maneeshee VaidikAcAram manasApi na langhayEt

\- *S*ree Lakshmi Tantram

ஶ்ரீ:



“नित्य सिद्धैस्समाकीर्णं तन्मयैः पाञ्चकालिकैः ।”

“नमस्ते पञ्चकालज्ञ पञ्चकाल परायण ।

पञ्चकालैकमनसां त्वमेव गतिरव्ययः ॥”

-JitantE stOtram

# ஶ்ரீவைஷ்ணவ ஸதாசார சுளகம்

## [ Code of conduct for SriVaishnavites in a nut-shell ]

தொகுப்பு

நெல்வாய் நைத்ருவ மாடபூஷி
ஸௌம்யநாராயணாசார்யர்

2011

<u>அட்டவணை</u>

| <u>குறிப்பு</u> | <u>Note</u> |
|---|---|
| 1.இத் தொகுப்பில், வேத மந்த்ர ஸ்வரங்களின் குறியீடு இவ்வாறு :<br><br>அநுதாத்தம் = புருஷ<br><u>ஏ</u>வே<u>தம்</u> ஸர்வம்<br>ஸ்வரிதம் = புரு'ஷ<br>ஏவேதம் ஸர்வம்<br>தீர்க்க ஸ்வரிதம் = புருஷ<br>ஏவேதம் ஸர்**வம்"** | 1.In this compendium, the svarAs of Veda mantrAs are indicated thus :<br><br>anudAttam = purusha<br><u>E</u>vE<u>dam</u> sarvam<br>Svaritam = pu**ru'**sha<br>EvEdam sarvam<br>Deergha svaritam= purusha<br>EvEdam sar**vam"** |
| 2.உச்சரிக்கவேண்டிய மந்த்ரங்களும்/ வாக்யங்களும் **தடிமனான எழுத்திலும்**;<br><br>-ஸ்ரீ ஸந்நிதி ஆஹ்நிகத்தில் விசேஷித்து சொல்லப்பட்டவை இப்படி ***எழுத்திலும்***;<br><br>-ஸ்ரீ கோபால தேசிக ஆஹ்நிகத்தில் விசேஷித்தவை இப்படி <u>*எழுத்திலும்*</u>;<br><br>-கூடாதவை இப்படியும் குறிக்கப்பட்டுள்ளன. | 2. MantrAs and sentences to chant, are given in **bold letters**;<br><br>-*S*ree Sannidhi Anhika practices ***thus***;<br>-specifics of *S*ree GOpAla DE*s*ika Anhikam <u>*thus*</u> [Individuals should follow as advised by one's AcArya.]; and<br><br>-"don'ts" as high -lighted; for easy reference. |
| 3.ஆஹ்நிகத்தில்(சக்தர்களுக்கு, விவரமாகவும்-விசேஷமாகவும் சொல்லப்பட்ட) விஷயங்கள் [அடைப்புக் குறியுள் சிறு எழுத்தில்] தரப்பட்டுள்ளன. ருசி உள்ள | 3. The (special and detailed) practices for proficient persons are given within [ ] brackets in smaller fonts. Those who are interested, should study these |

| | |
|---|---|
| வர்கள் அவைகளையும் பெரிய வர்களிடமிருந்து அறிந்து, அநுஷ்டிக்கவும். | from AcAryAs before commen cing to put them into practice. |
| 4.இந்தத் தொகுப்பில் உள்ள வையெல்லாம் பொதுவாக, புருஷர்களுக்கான நியமங்கள். | 4. Generally, the details and codes given in this book are meant for men-folk only. |
| 5.ஸ்த்ரீகளுக்கு, இவைகளில் உசிதமான தாந்த்ரிக தர்மங் களும்/ அவர்களுக்கென்று விசேஷித்த நியமங்களும், இத் தொகுப்பின் கடைசியில் கொடுக்கப்பட்டுள்ளன. | 5. Applicable TAntrika DharmAs and specific practices meant for women-folk, are given at the end of this compendium. |

# Foreword

Dear Srivaishnavites,

Our Sabha is extremely happy to bring out another very useful book called "Sri Vaishnava Sadachara Sulakam" through our Sri Vedanta Desika Research Center. This book also is authored by our beloved 'Sri Desika Seva Ratnam' Sri Sowmyan Swamy. It is to be noted that "Dharmo Visvasya Jagata: Pratishta" meaning that the world is functioning due to Dharma. Following one's Dharma is considered the most important in one's life as "Dharmo Rakshati Rakshita:" meaning if you follow Dharma, Dharma will protect you. In the same way "Dharma Eva Hato Hanti" meaning if you do not follow you will perish.

This book gives in a nut-shell the daily routine which is required to be followed by every Sri Vaishnavite right from getting up from bed, praying to God, Taking bath, doing Sandhyavnadanam, Bhramayegyam, Abhigamanam, Madhyanikam, Ijyai Aradhanam, Vaisvadevam, Bhojanam, Parayanam, Sayam Sandhyavandanam, Parayanam, Vaisvadevam, Parayanam and Yogam. In short this is an SOP for a Srivaishnavite from Bed-to Bed. Besides the code of conduct for men, this book also deals with the Stree Dharma, the code of conduct for women.

Dharma Sastra is vast and very delicate. It is to be learnt from the Acharyas who are knowing it and also practising it in letter and spirit. For a common man it is difficult to know fully and follow it. To facilitate the compliance of bear minimum requirement Sri Sowmyan Swami has written this book based on the poorvacharya's texts. We hope that this book will be useful to those who want to follow the Dharma in today's busy life style.

Yours Desika Dasan,

S Govindarajan
President (Sri Vedanta Desika Sampradaya Sabha)
01-02-2011

| ஸ்ரீ:<br>விஜ்ஞாபனம்<br>*** | Sri:<br>Humble submission<br>*** |
|---|---|
| आचारप्रभवो धर्मः<br>धर्मस्य प्रभुः अच्युतः । | "Conduct is driven by Dharma & Dharma is ruled by AtchutA" |
| நாம் எல்லோரும், விஷயங்களை அறியும் திறன் கொண்டவர்கள். அதனால் "சித்" எனப்படுபவர்கள். பகுத் தறிவினால் நாம் ப்ரதானமாக அறிந்து கொள்ள வேண்டியது – "அறியும் திறனற்ற கல்-கட்டை போன்ற அசேதநங் களைவிட நாம் உயர்ந்தவர் கள்" என்பது. இவ்வளவால், `அசேதநத்துக்கு அடிமையா வதோ/ அதன் பின் ஓடுவதோ, நம் ஸ்வரூபத்துக்கு ஒவ்வா தது' எனக் கிடைக்கிறது. | All of us possess the ability to understand; Hence are known as "cit". Using the sixth sense what we should primarily under-stand is – We are better than and superior to acEtanas like stone, wood etc. Hence, it is clear that "It is unbecoming of our self and stature to be subservient to that acEtana or run after it". |
| 'சித்'தான நம்மால், ஏதா வது ஒரு செயலைச் செய்யா மல் ஒரு க்ஷணம் கூட இருக்க முடியாது; | "cit" as we are, it impossible to remain un-occupied – remain doing nothing, even for a second. |
| *இந்த்ரியங்களுக்குப் புல னாகும் அசேதநங்களின் பின் செல்லக்கூடாதென்றால், வேறு என்ன செய்வது?* என்றால் : | When we are not supposed to `run-after' the acit, what else we could do ? The answer is : |
| நம்மையும் அசேதநங்க | We should try to truly |

| | |
|---|---|
| ளையும் தவிர்த்த – ஆனால் இந்த்ரியங்களுக்குப் புலப்படாமல், சாஸ்த்ரங்களால் மட்டுமே அறியமுடிவதான/ அனைத்தையும்விட உயர்ந்த/ பரதத்வமான எம்பெருமானை நன்கறிந்து, அவனுக்குப் ப்ரீதியான கார்யங்களைச் செய்துகொண்டு, அவனளிக்கும் பரமானந்தத்தை அநுபவிப்பதே! இதுதான் நம் ஸ்வரூபம். | understand, The Almighty is EmperumAn - supreme to every being, graspable not by means of senses, but only through sAstrAs and absolutely different from the acEtanas / and we-cEtanas. We should do such acts by which He gets pleased; and taste the joy of The Supreme, which defines our character. |
| எம்பெருமானை எப்படி ப்ரீதிசெய்வது? தினமும் ஆராதிப்பதினால் எம்பெருமான் ப்ரீதனாகிறான். "யாகம்" எனப்படும் இவ்வாராதனத்தை, சாஸ்த்ரம் விதித்தபடியேதான் செய்யவேணும். இவ்விதிகளை ஆசார்யன் மூலமாகவே அறியவேணும் என்பதனால் ஸம்ப்ரதாயத்தில் வைஷ்ணவீ-கரணம்' என்னும் பஞ்ச ஸம்ஸ்காரமாக இதை அமைத்திருக்கிறார்கள். | How to earn the good-will of God ? Simple; we should perform His ArAdhana by which He gets delighted. This ArAdhana should be carried out strictly in accordance with sAstric dictums only. Since these prescriptions are to be learnt under a Guru, our tradition has built-in a ceremony known as `panca samskAra'. |
| இந்த ஸம்ஸ்காரத்தில் ப்ரதானமாகவும்/ ஐந்தாவதாகவும் இருப்பது "யாக ஸம்ஸ்காரம்"ஆகும். இதை செய்விக்கும்போது, எம்பெருமானை | Among this purification ceremony, the fifth and the most important one is the "yAga" ritual. During this rite the Guru |

| | |
|---|---|
| ஆராதிக்கும் வகையை ஆசார்யர்கள் உபதேசிக்கிறார்கள். இதற்கு முந்தய நான்கு ஸம்ஸ்காரங்களான “தாப-புண்ட்ர-நாம-மந்த்ரங்கள்” – யாகத்திற்கு ’யோக்யதா-ஆபாதகங்கள்’ (தகுதியை உண்டு பண்ணக்கூடியவைகள்). | teaches the ways and means of performing the ArAdhana. The other four samskArAs viz. tApa-pundra-nAma –mantra, are only preludes to yAga, creating eligibility for performing yAga. |
| இவ்வாராதனத்தை, அதற்கு யோக்யதையும்/ பலனையும் உள்ளடக்கிய நித்ய-கர்மாக்களோடு நமக்குத் தெளிய அறிவிக்கும் ‘ஆசார-அநுஷ்டான’ க்ரந்தம்தான் “ஆஹ்நிகம்” என்பது. | Anhikam is nothing but a compilation of the rules and regulations of conduct of ArAdhana, along with the eligibility, preludes and also the fruits of conduct of this daily-routine (nitya-karma). |
| ஸ்ரீவைஷ்ணவர்க்கான ஆஹ்நிகங்களில் ப்ரதாநமானவை – ஸ்ரீமத் பாஷ்யகாரரின் ’நித்யம்’, ’வங்கி காரிகை’, ஸ்வாமி தே*சி*கனின் ’வைஷ்ணவ திநசரி’, ஸ்ரீ ரங்கநாத யதீந்த்ர மஹா தே*சி*கனின் (26-ம் பட்டம் அழகிய சிங்கர்) ’ஸ்ரீவைஷ்ணவ ஸதாசார நிர்ணயம்”, ஸ்ரீ கோபாலதே*சி*க ஆஹ்நிகம், ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமியின் ’லக்வாஹ்நிகம்’, ஸ்ரீ நாராயண யதீந்த்ர மஹா | Foremost among the Anhikams for *S*rivaishnavites are : \`Nityam’ of *S*ree BhAshyakara; \`Vangi kArikai’; \`VaishNava Dinacari’ of SwAmi DE*s*ikan; \`*S*ree vaishNava sadAcAra nirNayam’ of *S*ri RanganAtha yateendra mahA DE*s*ikan (the $26^{th}$ pontiff – azhagiasingar - of *S*ri Ahobila Mutt); \`laghvAhnikam’ of *S*ri kOzhiAlam swAmy; \`*S*udheepriya’ of $45^{th}$ pontiff – azhagiasingar - of *S*ri Ahobila |

| | |
|---|---|
| தேசிகனின் (45-ம் பட்டம் அழகியசிங்கர்) 'ஸுதீப்ரியா' ஆகியவை. | Mutt) etc. |
| பஞ்சஸம்ஸ்காரம் ஆன பிறகு, ஆஹ்நிக மூல க்ரந்தத்தை ஆசார்யனிடம் ஸேவித்து, உபதேசம் பெற்ற பிறகே பகவதாராதநம் செய்யத் தொடங்குவது சிஷ்டாசாரம். | It has been our tradition to properly approach AchArya and get panchasamskAra performed by him first and only after that as advised by him commence performing ArAdhanam for BhagavAn. |
| சிஷ்டாசாரங்கள், தர்ம சாஸ்த்ரத்தை ஒட்டி ஏற்பட்டவை. அவற்றில் எங்கேயாவது சில வேறுபாடுகள் இருக்குமாயின், ஒன்றுக்கொன்று விரோதமெனக் கருதாமல் யோஜனா பேதமாக எண்ணி – அவர்வர்கள் பூர்வர்கள் சென்ற வழியிலே செல்வதும்-செய்வதுமே, நம் கர்த்தவ்யம். | Conduct of virtuous persons closely follows the sAstras. Should there be any difference in practice amongst them, it should not be treated as contemporary; but accepted as differrences in interpretation. The best method for each one is to follow and conduct himself, the way his ancestors have done. |
| கால-தேச-வர்த்தமானங்களால்,'ஆசார-அநுஷ்டானங்களும்' சுருக்கமடைந்து வருவது கண்கூடு. எதற்கு எடுத்தாலும் 21-ம் நூற்றாண்டை மேற்கோள் காட்டும் இந்த ஸந்தர்ப்பத்தில், 'லௌகிக வ்ருத்திக்கு' நடுவில், விட்டு விடாமல் இன் | It is a fact that these codes are getting diluted over the period. Particularly in the pretext of `21st century', such practices are abandoned as `out-dated', by materialistic men. In spite of this, there are some Srivaishnavites who remain interested to know and follow these practices. |

| | |
|---|---|
| றும் அநுஷ்டிக்கும் வகையில், ஆஹ்நிகத்தை எளிதாகவும் சுருக்கமாகவும் அறிய ஆவல் கொண்டுள்ள ஸ்ரீவைஷ்ணவர் களைக் கருத்தில்கொண்டு, ஸ்ரீரங்கநாத யதீந்த்ர மஹா தேசிகன்/ ஸ்ரீ கோபாலார்ய மஹா தேசிகன் அநுக்ரஹித்த ஆஹ்நிகங்களைத் தழுவி இந் நூல் எழுதப்படுகிறது. | Keeping in mind their interest, this compilation is designed, closely following the works of 26th Azhagiasingar - *S*ri Ranga-nAtha Yateendra MahA DE*s*ikan and *S*ri GopAlArya MahA DE*s*ikan. |
| ஒரு நாளின் அநுஷ் டானங்களை – அபிகமனம், உபாதானம், இஜ்யை, ஸ்வாத் யாயம், யோகம் என – ஐவகை வேள்வியாகப் பிரித்திருக்கின் றனர். இதில் நடுநாயகமான 'இஜ்யை' தான் ப்ரதானம்; முதல் இரண்டும் அதற்கு முன்னோடியாகவும், பின்னது இரண்டும் அதனுடைய பரி வாஹமாகவும் அமையும். | The religious austereties are classified into five ceremo nies, such as –abhigamana (approach)/ upAdAna (acquir ing)/ ijyA (offering)/ svAdhyAya (study for self)/ yOga (con templation of Supreme). Out of these, the central one viz. \`Ijya' is the main. The first two rites are preludes to Ijya and the last two are extensions. |
| மற்றோர் வகையாக கால அளவு– *ப்ராத:/ ஸங்கவ/ மத்யாஹ்ன/ அபராஹ்ன/ ஸாயாஹ்ந*ங்களாக பகல் 5 ஸமமாகவும், *பூர்வராத்ரி, அபர ராத்ரி* என இரவு 2 ஸமமாகவும் – பிரிக்கப்பட் டிருக்கின்றன. வேள்விகளும், | There is another kind of classification, by time, of equal duration– the day-time into 5 viz. prAtah/ sangava/ madhyAnha/ aparAnha/ sAyAnha & the night time into two, as poorva rAtri and apara rAthri. All the rituals |

| | |
|---|---|
| அவைகளில் செய்யவேண்டியவைகளும், அவற்றின் காலங்களும் சுருங்க இவ்வாறு அட்டவணையில் காணலாம் : | and their prescriptions & timing are given in a concise form by means of the following Table, for easy reference. |

| வேள்விகள் | செய்யவேண்டியவை | காலங்கள் |
|---|---|---|
| அபிகமனம் [முதல் ஜிதந்தே ஸ்தோத்ர விஷயம்] | -ப்ராஹ்ம முஹூர்த்தத்தில் தொடங்கிசெய்யவேண்டியவை<br>-நிர்வேத காரிகை<br>-ஸங்கீர்த்தனம்<br>-அத்யயனம்<br>-தேஹசுத்தி – ஸ்நானம்<br>-ப்ரஹ்மபுரி அலங்காரம்– வஸ்த்ர/ஊர்த்வபுண்ட்ரம் | பின் ராத்ரியின் கடைசியாமம் |
| | -ப்ராதஸ் ஸந்த்யாதிகள்<br>-பகவத்கைங்கர்யம் தடையின்றி நடாத்த செய்யும் சரணாகதி | ப்ராத:காலம் |
| உபாதானம் [ 3-ம் ஜிதந்தே ஸ்தோத்ர விஷயம்] | த்ரவ்ய [பாஹ்ய] /ஜ்ஞாநம் [ஆந்தரம்] சேகரித்தல் | ஸங்கவ காலம் |
| இஜ்யை [ 2-ம் ஜிதந்தே ஸ்தோத்ர விஷயம்] | -மாத்யாஹ்நிகம் பூதசுத்தி/மானஸாராதனம்<br>-ஷடாஸன- பாஹ்ய ஆராதானம்<br>-வைச்வதேவ- தீர்த்த பரிக்ரஹ- போஜன- தாம்பூல சர்வணாதிகள் | மத்யாஹ்நம் + அபராஹ்நம் |

| | | |
|---|---|---|
| ஸ்வாத்யாயம் [ 4-ம் ஜிதந்தே ஸ்தோத்ர விஷயம்] | -இதிஹாஸ/ புராணாதி படனம் -லௌகிக வ்ருத்தி | அபராஹ்நம் + ஸாயாஹ்நம் |
| | அத்யயன/ அத்யாபன/ ஸாயம் ஸந்த்யாதிகள், பகவத்கதா ச்ரவணாதி | ஸாயாஹ்நம் + பூர்வ ராத்ரி |
| யோகம் [ 5-ம் ஜிதந்தே ஸ்தோத்ர விஷயம்] | பகவச் சிந்தனம் | பின் ராத்ரி யின் முதல் யாமம் வரை |

[ குறிப்பு : *ரிக் வேதத்*தினுடையவும்/ *புராண*ங்களுடையவும் பகுதியாக எண்ணப்படும் 6 *ஜிதந்தே ஸ்தோத்ர*ங்கள் உண்டு. அவைகள் இந்த "ஐவகை வேள்வி" யின்போது *அநுஸந்தி*க்கப்படுமவை எனப் பெரியோர் பணிப்பர் ]

| Rites | Activities | timing |
|---|---|---|
| abhigamana (approach) (subject of JitantE stOtram1) | -to be performed starting BrAmha muhoortam - Repentance -praising -learning -cleaning of body-bathing -decoration of body –dressing/ nAmam -Morning sandhyA-vandanam etc | Last *YAma* of night's second-half |
| | -Morning sandhyA-vandanam etc -surrender for performing uninterrupted service to Lord | *prAtah kAlam* |

| | | |
|---|---|---|
| upAdAna (acquiring) (subject of JitantEstOtram3) | Collection of materials [bAhya] and acquiring know ledge [Antara] | Sangava kAlam |
| ijya (offering) (subject of JitantE stOtram | -mAdyAnhikam<br>-bhoota suddhi<br>-mAnasa ArAdhanam<br>- External ArAdhanam with six AsanAs<br>-vaisvadEvam/ acceptIng teertham / eating lunch/ consumption of betal-leaf | madhyAnham + aparAnham |
| svAdhyAya (study for self) (subject of JitantE stOtram 4) | -Reading itihAsa/ purAnAs<br>-worldly activities | aparAnham + sAyAnham |
| | -Evening sandhyAvandanam etc/ learning/ teaching/ listening to episodes of Lord | sAyAnham + night's first-half [poorva rAtri] |
| yOga (contemplation of Supreme) (subject of JitantE stOtram 5) | Meditating on Lord | first yAmam of Night's later half [apara rAtri] |

[ Note : There are 6 JitantE stOtrAs which are part of RigvEda/ purAnas. It is the considered view of scholars that these stOtrAs are illustrative of activites during these 5-Rites mentioned above ]

| | |
|---|---|
| இத்தொகுப்பில் சொல்லப் பட்டவை, குறைந்த பக்ஷ *அநுஷ்டான*ங்களே. ஆதலால், இவற்றையே *ப்ரமாண*மாகக் கொள்வதைவிட, "***யதாசக்தி அநுஷ்டானத்தில்*" ஊக்குவிப் பதற்காக எடுத்த முயற்சி** என்பதே பொருத்தம். | Activities listed in this compilation are bare-minimum. Hence, it is appropri ate to treat this compilation as \`an effort to encouraging performance of possible rites, than quoting them as \`The complete Authority'. |
| பகவத் கைங்கர்யத்தை நேராகவே செய்யும் *புருஷர்*களுக்கு *ஸஹாய*மாக, (*பரிச்சதாதி*களாய்) நிற்கும் ஸ்த்ரீகளுக்காக *விசேஷித்து*ச் சொல்லப்பட்ட *தர்ம*ங்களும்/ *கர்ம*ங்களும் "*ஸ்த்ரீ தர்ம*ங்கள்" என்ற தலைப்பில் கடைசியில் சுருங்கச்சொல்லப்பட்டிருக்கின்றன. | Towards the end of this compendium, \`the activities of females' who are expected to assist male members in performing the rites – Bhagavat ArAdhanam - are given in brief, under the caption "stree dharma / and karma" . |
| [கீழ்ச்சொன்ன *கர்மா*க்களை *ஸகால*த்தில் செய்வதே *உத்தமம்*. இன்று நடைமுறையில் பெரும்பாலும் ஒரு நாளின் பெரும்பகுதி "*லௌகிகவ்ருத்தி*"யிலேயே செலவிடப் படுகிறது. இவ்வாறு *கார்யாந்தர நிர்பந்த*த்தினாலோ/ *ஆலஸ்ய*த்தினாலோ, *கர்மா*க்களை *கால*ங்களில் செய்வது தவறுமாகில்- அவைகளை விட்டு | [Nothing like, performing these rites on time prescribed. Now-a-days most part of our time is spent on \`materialistic pursuits'. Because of this bond or due to laziness, when these prescribed rites and rituals are missed to be done on-time, we tend to skip them totally. Instead, it is better to perform |

| | |
|---|---|
| விடுவதைவிட– தகுந்தாற் போல் *ஆகர்ஷித்து* முன்ன மேயோ/ *காலாதீத*மாக *ப்ரா யச்சித்த*த்துடனோ *அநுஷ்டி*ப் பதே *உசிதம்*] | them, though belatedly, together with suitable prAyaccitta for the delay, or even before-time; Better late than never ! ] |
| " **धर्मो रक्षति रक्षित:** " | "Religious abstractions save their savior" |
| *தாஸன்*,<br>நெல்வாய் *நைத்ருவ மாடபூஷி ஸௌம்யநாராயணன்* | Truly yours,<br>Nelvoy *Naiddhruva madabhooshi sowmyanArAyana dAsa*n |

| | |
|---|---|
| श्री: | Sri: |
| (தனியன்கள்) | ( Taniyans ) |
| ['श्रीवैष्णव सदाचार निर्णय:' नाम ग्रन्थस्य कर्ता – (26-ம் பட்டம் அழகியசிங்கர்) | ["*SriVaishNava sadAchAra nirNayam*" of 26th pontiff – *Azhagiasingar* of AhObila mutt ] |
| ***श्रीवीरराघव यतीन्द्र पराङ्कु-शादि रामानुजार्य कमलानिधि योगिवर्यै: ।<br>संप्रेक्षितं करुणया परिपूर्णबोधं श्री रङ्गनाथ यतिशेखरं आश्रयाम: ॥*** | ***Sri veerarAghava yateendra parANkusAdi rAmAnujArya kamalAnidhi yOgivaryaih \|<br>samprEkshitam karuNayA paripoorNa bOdham sree ranganAtha yatisEkharam AsrayAmah \|\|*** |

| | |
|---|---|
| ***श्रीमते श्रीरङ्गनाथ यतीन्द्र महादेशिकाय नमः]*** | ***Sreemate sriranganAtha yateendra mahA dEsikAya namah*** |
| * * * * * | * * * * * |
| [ 'नित्याह्निक दीपिकायाः' कर्ता श्रीगोपालार्य महादेशिकः – (திருக்குடந்தை தேசிகன்) | [ "*nityAnhika deepikA of Sree gOpAlArya mahA dEsikah – Tirukkudantai dEsikan* ] |
| *श्री कृष्णदेशिक पदाम्बुज भृङ्ग राजं वेदान्तलक्ष्मण मुनीन्द्र कृपात्तबोधम् ।* | *Sri krshnadEsika padAmbuja bhrngarAjam vEdAntalaksh-maNa muneendra krpatta bOdham \|* |
| *त्रय्यन्त देशिक यतीन्द्र शठारि मूर्तिं गोपालदेशिक शिखामणिं आश्रयामः ॥* | *Tryyanta dEsika yateendra sathArimoortim gOpAla dEsi- ka sikhamaNim AsrayAmah* \| |
| *श्रीमते श्रीगोपालार्य महा देशिकाय नमः* ] | *SrimathE sri gOpAlArya mahAdEsikAya namah* ] |

| அபிகமனம் | Abhigamanam |
| --- | --- |
| [ப்ராஹ்ம முஹூர்த்தத்தில் தொடங்கிசெய்யவேண்டியவை] | [To be performed starting from Brahma muhoortam] |
| திநமும் ப்ராஹ்மமுஹூர்த்த (சூர்யோதயத்துக்கு முன்பு ஏழரை நாழிகைகள்/ மூன்று மணி/ ஒரு யாமம்) த்தில் நித்திரையை விலக்கி, 'ஹரிர் ஹரி: ஹரிர் ஹரி: ஹரிர் ஹரி: ஹரி:' என சொல்லிக் கொண்டு, படுக்கை யிலேயே உட்கார்ந்து, "க்ராஹ க்ரஸ்தே கஜேந்த்ரே ருவதி ஸரபஸம் தார்க்ஷ்யம் ஆருஹ்ய தாவந், வ்யாகூர்ணந் மால்ய பூஷா வஸந பரிகரோ மேக கம்பீர கோஷ: \| | We should get up from sleep, every day in the brAmha muhUrtam [71/2 nAzhigai before Sun-rise/ 3 hours/ one yAmam]; sitting on the bed itself, chant "harir- harihi harir- harihi harir- harihi harihi"<br><br>grAhagrastE gajEndre ruvati sarabhasam tArkshyamA- ruhya dhAvan, vyAghoorNan mAlya-bhOOshA vasana parikarO mEgha gambheera ghOshah \| |
| ஆபிப்ராணோ ரதாங்கம் சர-மஸிமபயம் சங்கசாபௌ ஸ கேடௌ, ஹஸ்தை: கௌமோதகீம் அப்யவது ஹரிரஸாவம்-ஹஸாம் ஹம்ஸ தேர்ந:\|\| | AbhipprANO rathAngam saramasimabhayam sankha cApau sakhEtau, hastaih kaumOdakeem apyavatu harirasAvamhasAm ham-saternah |
| நக்ராக்ராந்தே கரீந்த்ரே முகு-லித நயனே மூல மூலேதி கின்னே, நா஽ஹம் நா஽ஹம் நசா஽ ஹம் ந ச பவதி புந: தாத்ருசோ மாத்ரு சேஷு \| | nakrAkkrAntE kareendrE mukulita nayanE moola moolEtikhinnE, nAham nAham nacAham na cha bhavati punah tAdrsO mAdrsEshu |

| | |
|---|---|
| இத்யேவம் த்யக்த ஹஸ்தே ஸபதி ஸுரகணே பாவசூந் யே ஸமஸ்தே, மூலம் யத் ப்ராதுராஸீத் ஸ திசது பக வாந் மங்களம் ஸந்ததம் ந:\|\| | ityEvam tyakta hasthE sapadi suragaNE bhava soonyE samastE, moolam yat prAdurAseet sa disatu bhagavAn mangaLaM santatam nah |
| ப்ராதஸ் ஸ்மராமி பவபீதி மஹார்த்தி சாந்த்யை, நாராயணம் கருடவாஹநம் அஞ்ஜநாபம் \| | prAthassmarAmi bhavabheeti mahArti sAntyai, nArA yaNam garuda vAhanam anjanAbham \| |
| க்ராஹாபிபூத மதவாரண முக்திஹேதும் சக்ராயுதம் தருணவாரிஜ பத்ர நேத்ரம்\|\| | grAhAbhibhoota madavA raNa mukti hEtum cakrA- yudham taruNavArija patra nEtram \| |
| ப்ராதர் நமாமி மநஸா வசஸா ச மூர்த்நா பாதார விந்த யுகளம் பரமஸ்ய பும்ஸ: \| | prAthar namAmi manasA vacasA cha moordhnA, padAravinda yugaLam paramasya pumsah \| |
| நாராயணஸ்ய நரகார்ணவ தாரணஸ்ய பாராயண ப்ரவண விப்ர-பராயணஸ்ய\|\| 2 | nArAyaNasya narakArNava tAraNasya, pArAyaNa pra- vaNa vipra-parAyaNasya \| |
| ப்ராதர் பஜாமி பஜதாம் அபயங்கரம் தம், ப்ராக் ஸர்வ ஜந்ம க்ருதபாப பயாபநுத்யை\| | prAtar bhajAmi bhajatAm abhayamkaram tam, prAk- sarva janmakrta pApa bhayApanutyai \| |
| யோ க்ராஹவக்த்ர பதிதா ங்க்ரி கஜேந்த்ர கோர, சோக ப்ரணாசம் அகரோத் த்ருத சங்கசக்ர: \|\| 3 | yO grAhavaktra patitAnghri gajEndra ghora, sOka praNAsam akarOt dhrta sankha cakrah \| |
| ச்லோகத்ரயமிமம் புண்யம் ப்ராத: உத்தாய ய: படேத் \| லோகத்ரய குரு: தஸ்மை தத்யாத் ஆத்மபதம் ஹரி: \|\| | slOkatrayamimum puNyam prAtarutthAya yah patEt\| lOkatraya gurustasmai dadyAt Atmapadam harih \| |

| | |
|---|---|
| ஹரி சப்தார்த்தமான இந்த ச்லோகங்களால் பகவானை த்யாநிக்கவும். | Meditate on Almighty through these slOkAs, that are pregnant with meaning of the word Hari. |
| <u>நிர்வேத காரிகை</u> | <u>nirvEda kArikai</u> |
| பிறகு, ச்ரோத்ராசமநம் *(*வலது கையால், மூக்கு நுனி யையும்- வலது காதையும் '**ஓம்**' எனத் தொடுவது*)* செய்து, "பழுதே பலபகலும் போயினவென்று அஞ்சி அழுது"- வருந்தி, இனி பகவானை "அரவணை மேல் கண்டு தொழுதே" போக்க வேணுமென ஸாத்விகமான தைர்யத்தைப் பெற்று, பகவத் கைங்கர்யத்தைச் செய்ய விடா மல் தடுக்கும் விரோதிகளான பாபங்கள் கழியவேண்டி, ஆசார்யர் உபதேசித்த : | SrOtrAcamanam [touching the tip of the nose and then right-ear with right finger-tip, chanting `**Om**']. Then, as said by AlvAr - "I fear and cry that, many days have gone a waste" – one should repent and then recover to get emboldened by *satva*-thought that `from now onwards I should remain forever, at the service of The Lord who is reclining on Adi *s*esha. With the aim of thwarting our sins, that drift us away from serving The Lord, one should beg Him through this mantra, as taught by AcAryAs – |
| **"த்வய்யாராதந காமோ**ऽ**யம் வ்ரதம் சரிதும் இச்சதி \| ஸங்கல்ப ஸித்யை பகவந் ! பூரயா**ऽ**ஸ்ய மநோரதாந் \|\|** என்ற மந்த்ரத்தால் பகவானிடம் ப்ரார் த்திக்கவும். | "**tvayyArAdhana kAmOyam vratam caritum icchati \| Sangkalpa siddhyai bhagavan poorayAsya manOrathAn**". |
| [நிர்வேத/ ஸாத்விக தைர்யத் துக்கான ச்லோகங்கள் மூல க்ரந்தத்தில் பார்க்கவும்] | [ For detailed slokAs to beget sAtvika courage, see the original text of Anhikam ] |

| | |
|---|---|
| <u>ஸங்கீர்த்தனம்</u> | <u>Prayer</u> |
| அடுத்து, ஆசார்யன் முதல் பகவான் வரையிலான குரு பரம்பரையை த்யாநித்து, எம் பெருமான்/ தேவிமார்களை திரு நாமங்களால் துதித்து, முடிந்த வரையில் பூர்வாசார்யர்கள் அருளிய செவிக்கினிய ஸ்தோத் ரங்களை வாய்விட்டு ஸேவிக்க வும் (<u>*த்வயாதி மந்த்ர ஜபம் செய்யவும்*</u>) | Next, one should medi-tate on the lineage of teachers – beginning from one's Guru to The Lord; To the extent possible, chant the nAmAs of the Lord and His concerts, utter loudly the hyphoneous stotrAs of our earlier Gurus and AcAryAs. [ *Time permitting, we can perform mantra-japam - like dvayam* ] |
| <u>அத்யயனம்</u> | <u>Study of vEdAs</u> |
| அவகாசத்துக்குத் தகுந்தாற் போல் ஸ்வசாகா- வேதாத்ய யநம்/ அத்யாபநம் செய்யவும். தங்கள் சாகையை அத்யயநம் செய்தவர்கள், ப்ரியப்பட்டால் மற்றசாகைகளையும் ஓதலாம். | Then, one should learn vEdAs, as applicable to his clan; One can also teach vEdAs. A person who has completed learning vEdAs pertaining to his clan, can study other vEdAs, if so desires. |
| பிறகு, முதல்நாளிரவு ஸங்கல்பித்துக்கொண்ட யோக த்தை, இப்போது **"பகவாநேவ . . . யோகாக்யம் கர்ம ஸ்வஸ்மை ஸ்வப்ரீதயே ஸ்வயமேவ காரிதவாந்"** என்று ஸாத்விக த்யாகத்துடன்முடிக்கவேண்டும். | After this, bring to a close, the vow taken during yOga, the previous night, by these utterances of sAtvik renunciation, "**BhagavAnEva . . . . . yOgAkhyam karma svasmai svapreetayE svayamEva kAritavAn**". |
| <u>தேஹ சுத்தி</u> **– (**ஸ்நானம் வரை**)** | <u>Cleansing of body</u> – [up to snAnam ] |
| நாம் செய்யஆசைப்பட்ட – | |

செய்யவேண்டிய – பகவத் கைங்கர்யத்துக்கு அடிப்படைத் தேவை, சுத்தமான –ஸத்வ குணம் ஓங்கிய மநஸ். இது ஆஹார சுத்தியினால் வளர்ந்த சுத்த சரீரத்தில் மட்டுமே உண் டாகக்கூடியது. இந்த ப்ராக்ருத சரீரத்துக்கு உள்ளும் -புறமும் அவ்வப்போது அசுத்தி ஏற்படு வது இயற்கையே. இவைகளை க் கழிப்பதால் சரீரம் சுத்த மடைந்து, மநஸ்ஸில் ஸத்வ-வ்ருத்தி உண்டாகும். அப்படி சுத்தப்படுத்தும் வழிகள்:

1) மல-மூத்ராதி விஸர்ஜநம்
2) சௌசம்
3) தந்த-தாவநம் (பல்-விளக்கு வது)
4) ஸ்நானம் ஆகியவை .

அக்காலத்துக்கு ஏற்ற வாறு, ஆஹ்நிக க்ரந்தங்களில் இதன் நியமங்கள் சொல்லப் பட்டிருக்கின்றன. அதன்படி நட ப்பதே உத்தம பக்ஷம். அதற்கு ஸம்பாவனையோ-சக்தியோ யில்லாதவர் குறைந்த அளவு அநுஷ்டாநமாக "செய்யக்

The basic requirement for performing the kainkaryam to God – which we desired to and should perform – is purity of mind, which is overwhelmed by satva guNa. This attribute could be acquired only by that body, which grows by taking sAtvic food. It is but natural that, by efflux of time, this body is susceptible to accumulating internal and external dirt. By cleansing this dirt, the body gets purified and the mind reclaims the satva attributes. The various ways of cleansing, are : 1) answerring natures'-call; 2) cleaning; 3) brushing the teeth; 4) taking bath etc. [ One may wonder, why at all sAstrAs prescribe these rudimentary chores that everybody knows! It is to educate about the proper technique, lest there could be any slip]

These prescriptions in the Anhika literatures were designed yester years, as appropriate and practicable that time. The best thing is, to follow them. For want of time and ability if one cannot follow them, the least that could be done, are given as under, which are grouped under `do's

| | |
|---|---|
| கூடியதும்- செய்யக் கூடாததும் இவ்வாறு :- | and don'ts' : |
| 1)<u>மல-மூத்ராதி விஸர்ஜநம்</u>: | 1) <u>Answering natures'-call</u> : |
| [மூல க்ரந்தங்களில், க்ருஹத்துக்கு வெளியே சென்று மல-மூத்ராதிகளை கழிக்கும் படியும், அதற்கான இடங்களும்/ தவிர்க்கவேண்டியவைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. இதற்கு ஸௌகர்யம் இல்லாதவர்களும் . . . ] | [ Places outside the house suitable or inappropriate for such activites and the metho- dology are given elaborately in the original texts. Even for those who are not in a posi tion to follow them, given below are some . . . . ] |
| <u>செய்யக்கூடியது</u> : - தலை-மூக்கு-வாய் இவைகளை துணியால் நன்றாக மூடிக் கொள்வது; | <u>Do's</u> : - To cover totally, the head, nose and mouth using the upper-cloth; |
| -பூணூலை நிவீதி(மாலை) யாக ஆக்கி வலது காதில் நன்கு சுற்றிக்கொள்வது; | -To change the wearing-position of yagnOpaveetam into niveeti [like wearing a garland] and extend it to tie around the right ear [care should be taken to ensure not removing the yagnOpaveetam from neck]; |
| -மல-ஜலம் கழிக்கும் போது, காலையானால் வடக்குநோக்கியும், இரவில் தெற்கு நோக்கியும் உட்காருவது; | - During morning, squat facing north; In the evening, south. |
| <u>செய்யக்கூடாதது</u>:- பேசுவது /காரி-எச்சில் துப்புவது, விழுங்குவது/ மல-ஜலத்தை பார்ப்பது | <u>Don'ts</u> : - Speaking, spitting, swallowing saliva and looking at the secreted waste; |
| -ஈர வஸ்த்ரத்துடன் மல-ஜலம் கழிப்பது | -Answering the calls with wet-clothes worn around. |

| | |
|---|---|
| 2) *சௌசம்*: | 2) cleaning & washing |
| [*மூல* *க்ரந்தங்*களில், மண்ணால் *சுத்தி* செய்யவேண்டிய வகையும்-தொகையும் சொல்லப்பட்டிருக்கின்றன. *சக்தி* இல்லாதவர்களும் . . .] | [ Original texts give the proce-dure and the number of times of washing with earth are given in detail. Those who are not able to follow them, given below are some . . . . ] |
| செய்யக்கூடியது : - அழுக்கை நன்கு/ மனதுக்கு *த்ருப்தி* ஏற்படும் வரையிலும் இடது கையால்-ஜலத்தால் அலம்பிக் கொள்வது; | Do's : - Washing the dirt with left-hand with water and fully till one is satisfied about the cleanliness; |
| -கை-கால்களையும் நன்கு அலம்பிக்கொள்வது; (க்ருஹஸ்தர்கள்)கச்சம் சொருகிக்கொள்வது; | -Then washing the hands thorou-ghly; married persons shall put on kaccham, which earlier they had untied. |
| - 12/6 தடவை வாய் கொப்பளித்து - துடைத்து, கை-கால்கள் அலம்பி, தலையை மூடிக் கொண்ட துணியை அவிழ்த்து இடுப்பில் சுற்றி, வலது காதில் சுற்றிய பூணூலை உபவீதியாக அணிந்து, 3/ 2 முறை ஆசமநம் செய்வது; | -Then, take mouth-full of water & spit 12/6 times/ wipe the lips/ wash the hands and legs / untie the cloth around the head and tie it around waist; untie the yagnOpa-veetam from the right ear and position it as upaveethi [like cross-belt on the body hanging from left shoulder] / do 3/2 Acamanams . |
| செய்யக்கூடாதது : - பேசுவது/ மல-ஜலத்தைப் பார்ப்பது | Don'ts : - Speaking, looking at the secreted waste |
| 3) தந்த-தாவநம் (பல்-விளக்குவது) : | 3) Brushing the teeth: |
| | [ Original texts give the usable and |

| | |
|---|---|
| [மூல க்ரந்தங்களில், உபயோகிக்கத் தக்க/ கூடாத குச்சிகளும்; க்ரஹிக்கும் மந்த்ரங்களும்; இலையால் தேய்க்க வேண்டிய திநங்களும்; பல் தேய்க்காமல்-வாயைமட்டும் கொப்பளிக்கும் ஸந்தர்ப்பங்களும் சொல்லப்படிருக்கின்றன. இதற்கு சக்தி இல்லாதவர்களும்] ] | to be avoided tooth-sticks / the mantrAs for procuring them, the days on which teeth could be cleaned with leaves and even the days on which only to wash through garg- ling without brushing, are given in detail. Even for those who are not in a position to follow these, given below are some . . . . ] |
| <u>செய்யக்கூடியது</u> : - ஆசமநம் செய்து, தலையில் மேல் உத்தரீயத்தை சுற்றிக் கொண்டு, குனிந்தோ/ உட்கார்ந்தோ, கீழ் வரிசையிலிருந்து தொடங்கி ப்ரதக்ஷிணமாக பல் தேய்ப்பது; | <u>Do's</u> : - Do Acamanam/ tie the upper cloth around head/ take bending or sitting position/ brush the teeth clock-wise, starting from the lower row; |
| - நாக்கை நன்கு வழிப்பது;<br>-பல்/ நாக்கு துலக்கும் ஸாதநங்களை நன்கு அலம்புதல்; | -clean the tongue fully;<br>-wash the things used for brushing; |
| - 12 தடவை வாய் கொப்பளித்து, துடைத்து, கை-கால்களை அலம்பி, தலையை மூடிக் கொண்ட துணியைஅவிழ்த்து இடுப்பில்சுற்றி, 2 முறை ஆசமநம் செய்வது; | - Gargle 12 times / wipe the lips/ wash the hands and legs / untie the cloth around the head and tie it around waist; do Acamanam 2 times. |
| <u>செய்யக்கூடாதது</u> : - பேசுவது/ ஆள்காட்டி விரலால் பல் தேய்ப்பது/ பல் குச்சியை | <u>Don'ts</u> : - Speaking/ brushing with right index finger/ touching water-vessel or other things |

| | |
|---|---|
| வாயில் வைத்தபடியே எச்சில் கையினால் வேறு வஸ்துக் களைத் தொடுவது | keeping `the brushing stick in the mouth and without washing the hand that held the brushing stick'. |
| 4) <u>ஸ்நானம்</u> : | 4) <u>Taking bath</u> : |
| [மூல க்ரந்தங்களில், தர்ம சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட 'அவகாஹன (மூழ்கி)' ஸ்நான முறைகளும்-மந்த்ரங்களும் / பூர் வாசார்யர்கள் அநுஷ்டித்த க்ரமமும்; மேலும் ஸ்நானத்தின் வகைகளும் சொல்லப்படிருக் கின்றன. இதற்கு சக்தி இல்லா தவர்களும் . . . . ] | [ Original texts list the prescribed methods of performing `ava-gAhana snAnam' [dip into the water] / their mantrAs / the system followed by elderly / AcAryAs/ different ways of executing `bath' etc. Even for those who are not in a position to follow these, given below are some . . . . ] |
| <u>செய்யக்கூடியது</u> : - ஸ்நான த்துக்கு எற்பட்ட வஸ்த்ரத்தை அணிவது. (க்ரஹஸ்தர்கள் அரையில் கச்சமும்/ மேல் வஸ்த்ரமும் அணிவது –கௌபீந த்தைக் களைவது. மற்றவர்கள் கௌபீநமும்/ அரை வஸ்த்ரமும் அணிவது ) | <u>Do's</u> : - Putting on separate (bathing) dress [married persons should put on kaccham & second cloth around the waist and take out the bit-cloth worn to cover the privities (koupeenam); others should wear clothes as well as koupeenam ] |
| - கை-கால்களை அலம்பி, 2 முறை ஆசமநம் செய்து, குரு வந்தனம்தொடங்கி- **'ப்ராதஸ் ஸ்நாநமஹம் கரிஷ்யே'** என்பதுவரை திதி - வார-நக்ஷத்ரங்களையும் க்ஷேத்ர-நதி நாமங்களையும் சொல்லி | -To wash legs and hands/ do Acamanam 2 times/ do sankalpa [vow/ oath] by uttering the tithi – day-star etc. starting from salutation to AcAryAs, and to end with **`prAtah snAnamaham karishyE'**. |

| | |
|---|---|
| ஸங்கல்பம் செய்வது.<br>-சுத்த ஜலத்தில் எம்பெருமானின் திருவடியிலிருந்து பெருகிய கங்கையை, “**விஷ்ணு பாதாப்ஜ ஸம்பூதே ! கங்கே ! த்ரிபத காமிநி \| தர்ம த்ரவேதி விக்யாதே ! பாபம் மே ஹர ஜாந்ஹவீ !**” ; “**கங்கே ! ச யமுனே ! சைவ கோதாவரி ! ஸரஸ்வதி ! நர்மதே ! ஸிந்து ! காவேரி ! ஜலேऽஸ்மிந் ஸந்நிதிம் குரு**” என்று ப்ரார்த்தித்து, சிரஸ்-ஸ்நானம் செய்வது. | -To invite The Ganga, which originates from the Holy feet The Lord, to be present in the bathing-water, as<br>“**VishNu pAdAbja sambhootE GangE tripatha gAmini \| Dharma dravEti vikhyAtE pApam mE hara jAnhavi**” ;<br>“**GangE ca YamunE caiva GodAvari Sarasvati \| NarmadE sindhu KAvEree jalEsmin sannidhim kuru**’ and perform head-bath. |
| - பிறகு, ஸ்நானசாடீ உத்தரீயத்தை நீளவாட்டத்தில் கொசுவி, நான்காக மடித்து, மந்த்ரமில்லாமல் பிழியவும். | -Then untie the upper cloth from the waist/ make it 4-fold length-wise and squeeze the water from it on to the ground without mantra. |
| -உலர்ந்த சுத்தமான இரு வஸ்த்ரங்களால் சிரஸ்ஸையும்-உடம்பையும் முறையே துடைத்துக்கொள்வது. | -Use dry-cloth first over the head and then the body to sponge out the water neatly. |
| பிறகு `**ப்ராதஸ் ஸ்நாநமஹம் கரிஷ்யே**’ என்று ஸாத்விக த்யாகம் செய்வது. | Satvika tyagam as ``**Bhaga-vAnEva . . . . prAtas-snAnAkhyam karma karitavAn**’ |
| செய்யக்கூடாதது : -மல-மூத்ரம் கழிப்பது/ எச்சில் துப்புவது/ வாய் கொப்பளிப்பது | Don’ts : - To pass urine/ stools, spit saliva, gargle or spit, while taking bath; |

| | |
|---|---|
| -வஸ்த்ரமில்லாமலோ/ பிறருடைய வஸ்த்ரமணிந்தோ ஸ்நானம் செய்வது. | -bathing without any dress on [naked]/ or wearing the dress used by others; |
| - (சாஸ்த்ரம்சொன்ன அவப்ருத ஸ்நானம்/ குழந்தை பிறந்ததைக் கேட்டவுடன் தகப்பன் செய்யும் ஸ்நாநம்/ தீட்டு கழியும்போது செய்வது- போன்றவைதவிர மற்ற ஸாதாரண காலங்களில்) ஸசேல-ஸ்நானம் (உடுத்த வஸ்த்ரத்துடன் ஸ்நானம் செய்வது) | - [except the cases prescribed by sAstrAs, as avabhrta snAnam on conclusion like yAga or teerthavAri etc/ bath for Father on hearing own child's birth/ bath undertaken to wither off teettu etc] To take bath on normal occasions with the dress originally worn during that day, known as [sacEla snAnam]; |
| -அமாவாஸை/பௌர்ணமி தவிர மற்ற தினங்களில் ஸமுத்ர ஸ்நானம் செய்வது<br>(ஸேது/ கடல் மல்லை-வர்க்கலை-பூரி போன்ற அர்த்த-ஸேதுக்களில் எந்த தினத்திலும் ஸ்நானம் செய்யலாம்) | -To take bath in sea on days other than amAvAsya or pourNami ( in sEtu or ardha-sEtu like Tirukkadan mallai, Varkalai, poori, prabhAsa kShEtram [near dvAraka,] etc. we can take bath on all days) |
| <u>ப்ரஹ்மபுரி அலங்காரம்– வஸ்த்ர/ ஊர்த்வபுண்ட்ர தாரணம்</u> | <u>Dressing of Brahmapuri</u> – <u>Wearing clothes/ putting on TirumaN</u> |
| ப்ரஹ்மமான எம்பெருமானுடைய உறைவிடமாக இருப்பதால், நம் சரீரத்தை ப்ரஹ்மபுரி என்பர். இதை ஸ்நானத்தால் சுத்தம் செய்த பிறகு, அலங்காரம் செய்யும் கர்மாதான் வஸ்த்ர/ ஊர்த்வ புண்ட்ரதாரணம்'. | Since Brahmam -The Lord resides within everyone, the body is called `Brahma puri'. After cleaning the body, that is, taking bath, the activity of decorating this body with proper dresses and TirumaN is known as `vastra/ Oordhva pundra dhAraNam' |

| | |
|---|---|
| செய்யக்கூடியது :- <br><br> [மூலக்ரந்தங்களில் சொன்ன விசேஷ விஷயங்கள் :- <br><br> **ஓம் பூர்புவ:ஸுவ’:** என்று வஸ்த்ர த்தை ப்ரோக்ஷித்து, சோஷண-தாஹந-ப்லாவநத்தால் சுத்தி செய்ய வேண்டும். **தேவஸ்ய’ த்வா ஸவிது: ப்ர’ஸவே அச்விநோ”ர் பாஹுப்யா”ம் பூஷ்ணோ ஹஸ்தா”ப்யாம் ஆத’தே** என்று எடுத்து; **உதுத்யம் ஜாதவே’ தஸம் தேவம் வ’ஹந்தி கேதவ: \| த்ருசே விச்வா’ய ஸூர்ய”ம்** என்று ஸூர்யனுக்குக் காட்டி, **அவ’ தூதம் ரக்ஷ’: அவ’தூதா அரா’தய:** என்று உதறி, **ஆவஹ’ந்தீ விதந்வாநா \| குர்வாணா சீர’மாத்மந’: \| வாஸா”ம் ஸி மம காவ’ச்ச \| அந்நபானே ச’ ஸர்வதா \| ததோ’ மே ச்ரியமாவ’ஹ** என்று உடுத்திக்கொள்ளவும்.] | Do’s : - <br><br> (Some of the special activities prescribed in the original texts : <br><br> Uttering `**Om Bhoor Bhuvas suvah**’ sprinkle little water on the dress to be worn and purify them with sOShaNa-dAhana-plAvana. Take it saying, **DEvasya’ tva savituh pra’savE, asvinO”r bAhubhyA”m pooshNo hastA”-bhyAm Aada’dhE**; expose them to sun light/ rays, uttering **Udutyam jAta vE’dasam dEvam va’hanti kEtava’h, drsE visvA’ya sooryam”**; unfold chanting **avadhootam raksha’h, avadhootA arA’tayah**; and wear it around saying **Ava- ha’ntee vitan vAnA, kurvANA ceera’mAtmana’h, vAsAm’si mama gAva’sca, annapAnE ca’ sarvadA, tatO’ mE sriya-mAva’ha**) |
| -உத்தரீயத்தைத் தலையில் சுற்றி, பூணூலை நிவீதியாக்கி வலதுகாதில் சுற்றி, கௌபீநம் தரித்து, கை- அலம்புவது; | -Put on the upper cloth around the head, change the yagnO-paveetam to niveeti position and tie it on right ear, wear koupeenam and wash hands; |
| _ சுத்தமான/ வெண்மையான உலர்ந்த வஸ்த்ரத்தை, இடுப்பில் வளைத்து, அரை- ஈர வஸ்த்ரத்தை மேல் புறமாக உருவித் தூக்கி, சுத்தமாக வைப்பது. | -Put on clean/ white dress around waist, remove upwar-ds the wet cloth used during bathing and keep it in a clean place. |

| | |
|---|---|
| -ஆச்ரமத்துக்கு தகுந்தவாறு வஸ்த்ரம் தரிப்பது. க்ருஹஸ் தர்கள் அரை-மேலாய் இரு வஸ்த்ரமாய், கச்சம் தரிப்பது; முதலில் முன் கச்சமும், பிறகு பின் கச்சமும் தரிப்பது. | -Wear the dress befitting one's Asrama – that is: married ones, to wear two-piece, one meant for waist / around the head and the other for waist-bottom; put on kaccham form, first the front one and next the rear one. |
| - தலையில் சுற்றியிருக்கும் உத்தரீயத்தை அரையில் தரி த்து, கை-கால்களை அலம்பி, பூணூலை உபவீதியாக தரித் து, இரு ஆசமநம்செய்து, களைந்து வைத்த ஸ்நாந சாடியை ப்ரோக்ஷித்து, வலப் புறம் வைப்பது. | -Remove upper cloth from the head and tie it around the waist, wash legs and hands before putting on yagnOpa- veetam in upaveeti posture, do Acamanam twice. Sprin- kle little water on the bathing cloth, keep it on the right side. |
| <u>செய்யக்கூடாதது</u> :- கரையில் லாததும்/ கருப்பு-நீலக் கரை யுள்ளதும்/ உடல் முழுவதும் வண்ணமானதும்/ அழுக்கான தும்/ கிழிந்ததுமான வஸ்த்ரம் தரிப்பது. | <u>Don'ts</u> : -Wearing clothes without border or with black-blue border or fully coloured like black, red etc or which are dirty, impure and torn . |
| -அரை-மேல் துணிகளை மேல்-கீழாகமாற்றி தரிப்பது<br>-பிறர் வஸ்த்ரம் தரிப்பது.<br>-உத்தரீயத்தை அகல-வாட் டத்திலோ/ இடுப்புக்குக் கீழே யோ உடுத்துவது. | -exchange the cloths meant for upper and lower positions, topsy-turvy;<br>-wearing others' dresses;<br>- using the upper cloth bread- th-wise or below the waist; |

| | |
|---|---|
| -ஈரவஸ்த்ரத்தை தோள் மேல் போட்டுக்கொள்வது | -hanging wet cloths over the shoulders. |
| <u>மந்த்ர ஸ்நாநம்</u> | <u>Mantra-snAnam</u> |
| பிறகு, ப்ராணாயாமம் செய்து, "**மந்த்ர ஸ்நாநமஹம் கரிஷ்யே**" என்று ஸங்கல்பித்து, இம்மந்த்ரங்களைச் சொல்லி, தீர்த்தத்தால் : | Then do prANAyAmam. Take oath as '**Mantra snAnamaham karishyE**'; sprinkle little water, like prOkshaNam, as mentioned below with the mantras : |
| **ஓம் ஆ<u>போ</u> ஹிஷ்டா ம'<u>யோ</u> புவ':** என்று பூமியிலும்; | -[on the gound] **Om ApO hishtA ma'<u>yO</u> bhuva'h ;** |
| **ஓம் தாந' <u>ஊ</u>ர்ஜே த'தாதந** என்று *சிரஸ்ஸிலும்*; | -[over the head] **Om tAna' <u>oo</u>rjE da'dhAtanA;** |
| **ஓம் <u>ம</u>ஹே ரணா'<u>ய</u> சக்ஷ'ஸே** என்று ஹ்ருதயத் திலும்; | -[on the chest] **Om <u>ma</u>hE raNA'<u>ya</u> caksha'sE;** |
| **ஓம் யோவ'ச் <u>சி</u>வத'<u>மோ</u> ரஸ':** என்று *சிரஸ்ஸிலும்*; | -[over the head] **Om yO va's <u>si</u>vata'<u>mO</u> rasa'h;** |
| **ஓம் தஸ்ய' பாஜயதே <u>இ</u>ஹ ந':** என்று ஹ்ருதயத்திலும்; | -[on the chest] **Om tasya' bhAjayatE <u>i</u>hana'h;** |
| **ஓம் <u>உசதீ</u>ரி'வ <u>மா</u>தர':** என்று பூமியிலும்; | -[on the gound] ***Om*** **<u>usa</u>teeri'va <u>mA</u>tara'h;** |
| **ஓம் தஸ்<u>மா</u> அர'ங்கமாம வ:** என்று ஹ்ருதயத்திலும்; | -[on the chest] **Om tas<u>mA</u> ara'ngamAvah;** |
| **ஓம் யஸ்<u>ய</u> க்ஷயா'<u>ய</u> ஜிந் வ'த** என்று பூமியிலும்; | -[on the ground] **Om ya<u>sya</u> kshayA'<u>ya</u> jinva'tha;** |
| **ஓம் ஆபோ' ஜநய'தா ச ந:** என்று *சிரஸ்ஸிலும்*; | -[over the head] **Om ApO' <u>ja</u>naya'thA ca nah.** |

